ரூ. 5.00

திருவள்ளுவராண்டு 2037
பங்குனி - மார்ச் 2007

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய
திங்களிதழ்




## ஜீவா நூற்றாண்டு விழா இதழ்

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| தனி இதழ் | ரூ. | 5-00 |
| ஆண்டுச் சந்தா | ரூ. | 60-00 |
| ஆயுட் சந்தா | ரூ. | 600-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. | 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆசிரியர்

**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :

சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

91/1

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவராண்டு 2038 (விய) மாதம் : பங்குனி

மலர் : 21 இதழ் : 3

H5717
LIBRARY

# தேசத்தின் சொத்து!

காலவெள்ளம் காலம்தோறும் மகத்தான மனிதர்களைப் பூமிப் பந்தில் பதிவு செய்திருக்கிறது. பாலைவனங்களில் பயணம் செய்து பசுஞ்சோலைகளை உருவாக்கித் தந்தவர்கள்! முட்காடுகளில் பயணம் செய்து மலர்வனங்களை உருவாக்கியவர்கள்! பலரின் வாழ்க்கைக்காகத் தங்களின் வாழ்க்கையைப் போராட்டமாகவே ஆக்கிக் கொண்டவர்கள்! வறுமையை வாழ்க்கை ஆக்கிக்கொண்டு, ஏழ்மையைத் தோழமை ஆக்கிக் கொண்டு கொடும் வெயிலில் காய்ந்து, கொட்டும் மழையில் நனைந்து, கடும்பனியில் நனைந்து மனிதகுல மேம்பாட்டிற்கு ஒரு புதிய யுகத்தைச் செதுக்குவதற்குத் தம்மை ஒப்படைத்துக் கொண்ட மகத்தான மனிதர்களின் வரிசையில் வந்த மகத்தான மனிதர்தான் "ஜீவா!" எளிமையும் நேர்மையும் இலட்சியமும் அறிவாற்றலும் உடைய உயர்ந்த மகத்தான மனிதர் இன்று உயிரோடு இருந்தால் அவருக்கு நூறு ஆண்டு!

ஜீவாவின் வாழ்க்கை வயதிற்கு அல்ல. இந்த நூறு ஆண்டு!
"*காலா! என்றன் காலருகே வாடா! சற்றே உனைக்*
*காலால் மிதிக்கிறேன்*"

என்ற உயர்ந்த இலட்சியத்தை நிலைநாட்டும் வரை, மரணத்தை மறுதலித்துப் போராடுவேன் என்று சொன்ன மாவீரர் ஜீவாவுக்கு மரணம் ஏது?

குன்றக்குடியின் அருகே சிராவயல் எனும் கிராமத்தில் காந்தியத் தவச்சாலை கண்டவர் ஜீவா. கோடிக்கணக்கான மக்கள் காணத் தவம் கிடக்கும், அவர் பேட்சைக் கேட்க வரம் வேண்டும் மகாத்மா காந்தி அடிகள் ஜீவாவின் தவச்சாலை நோக்கி நடந்து வந்தார். காலம் காலமாய் மனிதகுலத்தின் மீது ஏற்றத்தாழ்வுகளை விதிக்கப்படுவதற்காக

வரையறுக்கப்பட்ட வர்ணாசிரமக் கோட்பாடுகளைப் பற்றிய விளக்கத்தினை வேண்டித் துணிவாகவே மகாத்மாவோடு கலந்துரையாடுகின்றார்! மகாத்மா தந்த விளக்கம் நிறைவானதாய் இல்லாததால் வர்ணதர்மம் ஏற்றுக்கொள்ள முடியாதது என்று வெளிப்படையாகவே ஜீவா பேசினார். மகாத்மா காந்தி அடிகள் ஜீவாவிடம் "உங்களுக்குச் சொத்து இருக்கின்றதா?" என்று கேட்க, "தேசம் தான் என் சொத்து" என்று ஜீவா பகர்ந்தார். "இல்லை, ஜீவா! நீங்கள் தான் தேசத்தின் சொத்து" என்று காந்தி அடிகள் ஜீவாவின் கரம் பற்றிக் கொண்டு கண்ணீர் மல்கக் கூறினார்!

செயலில் மட்டுமல்ல! பேச்சிலும் ஜீவா உயர்ந்து நின்றவர். சிம்ம கர்ஜனையாம் அவர் பேச்சுக்கள்! சவங்கள் கூட ஜீவாவின் பேச்சுக் கேட்டால் சீவன் உள்ளனவாய் சிலிர்த்து உயிர்த்து எழும்! காரைக்குடிக் கம்பன் கழக மேடை! இலக்கிய உலகில் காலத்தையும் கருத்தையும் பேணுகின்ற உயர்ந்த இலக்கிய மேடை! பொதுவுடைமையில் பூத்த நறுமலர் கம்பன் இலக்கிய மேடையை அலங்கரித்தது! பக்திக் கண் கொண்டு மட்டுமே பார்க்கப்பட்ட கம்பன் பகுத்தறிவுப் பார்வையாலும் பார்க்கப்பட்டான்! நேரத்திற்குக் கடிவாளம் போடுகின்ற காரைக்குடிக் கம்பன் கழக மேடையில் பேரறிஞர் சரவண முதலியார் ஜீவாவின் பேச்சில் கரைந்து போனார்! மேடையில் பேச்சை நிறுத்த எச்சரிக்கும் சிவப்பு விளக்கு, ஜீவாவின் பேச்சு ஒளிவெள்ளத்தில் கரைந்து காணாமல் போனது! கம்பன் அடிப்பொடி சா. கணேசனார் "ஜீவா பேசினாரா? கம்பன் பேசினான்" என்று மகிழ்ந்து கூறினார்.

*"சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை*
*இகல்வெல்லல் யார்க்கும் அரிது"*

தமிழகத்துப் பட்டி தொட்டி எல்லாம் ஜீவாவின் முழக்கம் முழங்கியது. ஏழை, எளிய உழைக்கும் வர்க்கத்தின் விடியலுக்காக உரத்து முழங்கியது ஜீவாவின் சங்கநாதம்! உரிமை மறந்து வாழ்ந்த ஊமை மனிதர்களுக்காக உரக்க, உரக்கக் கூவியதால் ஜீவாவின் செவிப்பறை கிழிந்து கேட்கும் தன்மை இழந்தார்! ஜீவா முழக்கம் கேட்ட பின்னும் தமிழகத்து மக்களின் செவிகள் கேளாத் தன்மை அடைந்ததுதான் வேதனையிலும் பெரும் வேதனை!

அரசியல், சாதி, மத வேறுபாடு கருதாது எல்லா மக்களும் தலைவர்களும் போற்றுகின்ற "தேசத்தின் சொத்து ஜீவா!"

இலட்சியவாதிகளின் உடல் மட்டும் புதைக்கப்படுகின்றது! அவரின் இலட்சியம் விதைக்கப்படுகின்றது! இது ஜீவாவின் நூற்றாண்டு! சமத்துவ சமதர்ம சமூகம் படைப்பதற்கு ஜீவாவின் புகழ் பாடுவோம், பல்லாண்டு! ஜீவா காட்டிய இலட்சியத் தடத்தின் வழியே மானுடம் பயணம் செய்யட்டும்!

வாழ்க ஜீவா புகழ்!
வளர்க ஜீவா காட்டிய தொண்டு!

பொன்னம்பல அடிகளார்

## ஜீவாவின் நட்பு

தமிழ்த்தாய் ஈன்றெடுத்த தனிப்பெரும் மாணிக்கமான நண்பர் ஜீவா இந்த நாட்டில் வாழ்ந்த – வாழ்கிற கோடானு கோடி மக்களிடம் பழகினார். அவருடைய பழக்கத்தைப் பெற்ற பேறு பெற்றவர்கள் வரிசையில் நானும் இடம் பெற்றது பெரும் பேறே. அவருடைய பழக்கம் சுவடு பதிந்த பழக்கம் – உணர்வினாற் கலந்து ஒன்றித்துப் பழகிய பழக்கம்.

திருக்குறள் நட்பின் இலக்கணம் பேசுகிறது; வள்ளுவர் கண்ட இலக்கணத்திற்கு இலக்கியமாகத் திகழ்ந்தது ஜீவாவின் நட்பு.

பெரும்பாலான தமிழர்கள் வாழ்க்கையில் சராசரி காணப்பெறுகின்ற குறை, தங்களுடைய கருத்து வேற்றுமையைக் காழ்ப்பாக்கிப் பகைமையை வளர்த்துக் கொள்வது. ஜீவா அவர்கள் சித்தாந்த ரீதியாக கருத்து வேற்றுமையுடையவர்களிடத்துங்கூடக் கலந்து பழகும் சக்தி பெற்றிருந்தார். மேடையில் – எழுத்தில் தம்முடைய சித்தாந்தத்தோடு முரண்படுகின்ற கருத்துக்களைச் சாடும் பொழுது சுழன்றடிக்கும் சூறாவளி வீசும்; ஆனாலும் புழுதி பறக்காது. மார்க்சீய சித்தாந்தத்தின் ஊற்றுக் களனாகவே, ஜீவா வளர்ந்து வடிவம் பெற்று வாழ்ந்தார்.

– அருள்நெறித் தந்தையவர்கள்

(குன்றக்குடி அடிகளார் நூல்வரிசை தொகுதி 13லிருந்து)

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

## (தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## 73. அவையஞ்சாமை

அவையில் அஞ்சாமல் தமது கருத்துக்களை எடுத்துக் கூறுதல் அவையில் சொல்ல அச்சம் ஏற்படக் காரணங்கள்.

1. அவையினரை நோக்கத் தமது அறிவைத் தாழ்வாகக் கருதுதல். இது தவறு. தாழ்வுணர்ச்சி தீமையிலும் தீமை. அவையிலுள்ளாரிடம் சொன்னால்தான் குறை, நிறையாகும்.

2. அவையினர் தமது கருத்தை ஏற்பார்களோ, மாட்டோர்களோ என்ற ஐயம். இது பெரும் பிழை. பிறர் ஏற்பார்கள் அல்லது ஏற்க மாட்டார்கள் என்று எண்ணி எண்ணியதைச் சொல்லாதிருத்தல் பிழை ய ங் தொடக்கத்தில் எந்த அறிவுறுத்தலும் மக்களால் ஏற்கப்படாதவைகளே என்பதறிக.

*வகைஅறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்*
*தொகைஅறிந்த தூய்மை யவர்..* (721)

தூய்மைகள் அனைத்தும் ஒருங்கே பெற்ற, கற்கவேண்டிய நூல்கள் பலவும் கற்ற தூய்மையாளர்கள், அவையில் சோர்ந்தும் குறையுடைய சொற்களைச் சொல்லமாட்டார்கள்.

"ஏதாவது குறையுடைய மனிதராக இருந்தாலும் அக்குறையின் காரணமாக அச்சப்படுதலால் வாய் சோர்வர்" என்று உணர்த்திய அருமை அறிக.

"வகையறிந்து" என்றதால் அறிவாண்மையும் "தொகையறிந்து" என்றதால் பலராலும் தூய்மை உடைமையும் என்றவாறு.

*கற்றாருள் கற்றார் எனப்படுவர் கற்றார்முன்*
*கற்ற செலச்சொல்லு வார்.* (722)

கற்றறிந்த அவையினர்முன் தாம் கற்றவற்றை முறையாக மனங்கொள்ளச் சொல்லும் திறமுடையவர்களைக் "கற்றவர்களில் எல்லாம் கற்றவர்" என்று அறிஞர் உலகம் பாராட்டும்.

நிறைய கற்றவர்கள் எடுத்துச் சொல்லமாட்டாமையினாலே கற்றிலர் என்று கருதப்படுகின்றனர். எதை எங்குச் சொல்லினும் கேட்பவர் மனங்கொள்ளச் சொல்லும் திறன்வேண்டும் என்பது கருத்து.

*பகையகத்துச் சாவார் எளியர் அரியர்*
*அவையகத்து அஞ்சா தவர்.* (723)

பகைப்புலத்தில் வலிமை இல்லாதார் பலர் சாவர். அதுபோல் சொல்லும் துணிவு உள்ளவர்கள் சிலரேயாவர்.

கற்றல், சொல்லுதல், கூட்டுச்சேர்தல் தெளிந்தும் துணிந்தும் செயலாற்றுதல் வாழ்வியலின் இயக்கமுறை. கூறும் திறமில்லையானால் இவ்வியக்கம் தடைப்படும் என்பதறிக.

*கற்றார்முன் கற்ற செலச்சொல்லித் தாம்கற்ற*
*மிக்காருள் மிக்க கொளல்.* (724)

கற்றறிந்த அறிஞர் அவையில் இருப்போர் ஏற்கத்தக்க வகையில் தாம் கற்றவற்றைச் சொல்லி, அவையின் அறிஞர்களிடமிருந்து தாம் கற்றறிந்ததை விடக் கூடுதலாக அறிந்து கொள்க.

அறிஞர்களிடையில் நிகழும் விவாதம் அறிவை வளர்க்கும் என்பது கருத்து.

*ஆற்றின் அளவுஅறிந்து கற்க அவைஅஞ்சா*
*மாற்றம் கொடுத்தல் பொருட்டு* (725)

அவையஞ்சாது, தொடுக்கப்படும் வினாக்களுக்கு விடை கூறும் பொருட்டுக் கற்க வேண்டிய அளவுக்குக் கற்க வேண்டும்.

உலகம் கற்று வளரும் அளவறிந்து கற்றாலே உலகவர் அவையில் நிற்க இயலும். அதனால், "அளவறிந்து" என்றார்.

*வாளொடுஎன் வன்கண்ணர் அல்லார்க்கு நூலொடுஎன்*
*நுண்ணவை அஞ்சு பவர்க்கு.* (726)

பொருதும் வன்மையைப் பெறாதார் கையில் வாள் இருந்து என்ன பயன்? அவையஞ்சாமல் சொல்லாடல் செய்யும் வலிமையில்லாதோர் நுண்ணிய நூல்பல கற்பினும் என்ன பயன்?

கற்பது சொல்வதற்கே என்ற கருத்து உறுதிப்படுத்தப்படுகிறது. செயலாண்மை உடையார்க்கு வாளொடு பழகுதலும் நூலோடு பழகுதலும் பொருந்தும் என்றாயிற்று.

*பகையகத்துப் பேடிகை ஒள்வாள் அவையகத்து*
*அஞ்சு மவன்கற்ற நூல்.* (727)

பகைப்புலத்தில் பேடியின் கையில் வாள் போன்றது, சபையில் சொல்லுவதற்கு அஞ்சுபவன் கற்ற நூல்.

அச்சத்தால் பீடிக்கப்பட்டவர்களுக்கு பகைப்புலத்தில் கையில் உள்ள வாள் இருந்தும் பயனில்லை.

*பல்லவை கற்றும் பயன்இலரே நல்லவையுள்*
*நன்கு செலச்சொல்லா தார்.* (718)

நல்லவர்கள் கூடியுள்ள அவையில் தாம் கற்றவற்றை நல்லவண்ணம் சொல்லத் தெரியாதவர்கள் பல நூல்களைக் கற்றிருந்தாலும் யாதொரு பயனுமில்லாதவர்களே.

மற்றவர்க்கு விளக்கமுற எடுத்துச் சொல்வது, மேலும் தாம் விளக்கமுறவும் பயனுறவுமேயாம். ஆதலால் சொல்லும் ஆற்றல் இல்லாதார் கற்றும் பயனிலர் என்பது கருத்து.

*கல்லா தவரில் கடைஎன்ப கற்றுஅறிந்தும்*
*நல்லார் அவையஞ்சு வார்.* (729)

பல நூல்களைக் கற்றும் கற்றதன் பயன் தெரிந்திருந்தும் தாம் கற்றதை நல்லவர் அவையில் சொல்ல அஞ்சுபவர்கள் கல்லாதவர்களினும் கடையராகக் கருதப்படுவார்கள்.

கற்றும் சொல்லத் தெரியாதவர்களால் யாதொரு பயனுமில்லையாதலால் கல்லாதாரோடொப்பர் என்பது கருத்து.

*உளர்எனினும் இல்லாரொடு ஒப்பர் களன்அஞ்சிக்*
*கற்ற செலச்சொல்லா தார்.* (730)

அவைக் களத்தைக் கண்டஞ்சித் தான் கற்றவற்றை அவையில் உள்ளோர் மனம்கொள்ளச் சொல்ல இயலாதவர் அவர் வாழும் பொழுதே பயனின்மையின் காரணமாக இறந்தவர் என்று கருதப்படுவாரோடு ஒக்க எண்ணப்படுவர்.

பயனுடையராக வாழ்தலே வாழ்க்கை என்ற கோட்பாட்டை வலியுறுத்த "உளரெனினும் இல்லாரோடு ஒப்பர்" என்றார்.

*(தொடரும்)*

# மகாகவி பாரதியார்

(செந்தமிழ்த்திலகம். **தேவகிமுத்தையா** எம்.ஏ.,எம்.ஃபில்.)

**காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தில் 3.2.2007இல் ஆற்றிய உரை**

இந்து மதாபிமான சங்கத்தின் 90வது ஆண்டு விழாவிற்குத் தலைமை தாங்கும் டாக்டர். A.C.M. அவர்களுக்கு என் அன்பு கலந்த வணக்கங்கள். தமிழ்க்கடல் ராய. சொ பற்றி உரையாற்ற வந்திருக்கும் தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்களுக்கு என் சிரம் தாழ்த்திய வணக்கங்கள். இந்து மதாபிமான சங்கத் தலைவர், சகோதரர் சக்தி. திருநாவுக்கரசு அவர்களுக்கும், செயலாளர் PS.RM.A. ராமசாமி அவர்களுக்கும், பொருளாளர் CT. நடராஜன் அவர்களுக்கும் மற்றும் அங்கத்தினர் அனைவருக்கும் என் அன்பும் நன்றியும் கலந்த வணக்கம். எத்தனையோ பேரறிஞர்களும், பேச்சாளர்களும் ஏறிய மேடை இது. இதில் எனக்கும் ஒரு வாய்ப்புக் கிடைத்திருக்கிறதென்றால்

*"நாயேனையும் இங்கு ஒரு பொருளாக நயந்துவந்து*
*நீயே நினைவின்றி ஆண்டுகொண்டாய்; நின்னை உள்ளவண்ணம்*
*பேயேன் அறியும் அறிவுதந்தாய்; என்னபேறு பெற்றேன்!*
*தாயே! மலைமகளே! செங்கண்மால் திருத்தங்கச்சியே!"*

என்று என் அபிராமியின் அன்பருளை நினைந்து நினைந்து நெக்குருகுகின்றேன். எனக்குச் "செந்தமிழ்த் திலகம்" எனும் பட்டத்தை அளித்த தவத்திரு குன்றக்குடி அடிகளார் முன்னிலையில் பேசும்போது எனக்குப் பொறுப்பு அதிகமாகின்றது. அவர்கள் அளித்த பட்டத்திற்குத் தகுதியுடன் நான் விளங்க வேண்டும் என்றால் மேடையில் அதுவும் அவர்கள் எழுந்தருளியுள்ள மேடையில் மிகவும் கவனமாகப் பேச வேண்டும் எனும் அச்சம் என்னுள் படர்ந்து விடுகின்றது. மகாகவி பாரதியார் என்பது ஒரு மா கடல். அதுவும் எனக்குக் கொஞ்சமும் பழக்கமில்லாத கடல். கடற் பிரயாணம் என்றால் எனக்கு எவ்வளவு பயம் என்பதனை என் துணைவர் மட்டுமே அறிவார். சரி இந்து மதாபிமான சங்கத்திற்காக ஒரே ஒரு முங்கு முங்கலாம் என்று முயற்சி செய்தேன். முங்கிப் பார்த்தால் இந்தக் கடலில் அலைகளே இல்லை. எங்கு பார்த்தாலும் அழகிய முத்துக்கள்தான். அந்த முத்துக்களை சேர்த்துக் கோக்கவே ஒரு ஜன்மம் போதாது. ஏதோ சிலவற்றை எடுத்துக் கோத்திருக்கின்றேன். என் முயற்சியில் நிறைவு இருந்தால், அது நல்லன எல்லாம் தரும் அபிராமியின் அருள். குறைகள் இருந்தால் அவை முழுதும் என்னுடையதே என்று கூறிக் கொண்டு பாரதி பற்றிய சிறப்புரையைத் துவங்குகின்றேன்.

## அறிமுகம்

மாபெரும் கவிஞர் என்று புகழ்பெற்ற பாரதியாரின் இளமை வரலாறு ஒரு எழுச்சிக் காவியமாகும். அவரது வாழ்க்கையின் பிற்பகுதியோ உலகப்புகழ் வாய்ந்த பெரியோர்களின் தியாக வரலாற்றை நினைவூட்டும் உணர்ச்சிக் காவியமாகும். அவரது நாட்டுப் பற்றும் மொழிப் பற்றும் அளவிடற்கரியது. அவரது புதுமை நோக்கும், பொதுமை உணர்வும் போற்றுதற்குரியன. அவரது உயர்ந்த நோக்கும், சமுதாயக் கண்ணோட்டமும் சிந்தனையைத் தூண்டுவன. அவரைப் பற்றி பாவேந்தர் பாரதிதாசன் கூறுகின்றார்.

*பைந்தமிழ்த் தேர்ப்பாகன்; அவனொரு*
*செந்தமிழ்த் தேனீ; சிந்துக்குத் தந்தை!*
*குவிக்கும் கவிதைக் குயில்; இந் நாட்டினைக்*
*கவிழ்க்கும் பகையை கவிழ்க்கும் கவிமுரசு*
*நீடுதுயில் நீக்கப் பாடிவந்த நிலா;*
*காடு கமழும் கற்பூரச் சொற்கோ;*
*கற்பனை ஊற்றாம் கதையின் புதையல்;*
*திறம்பாட வந்த மறவன்; புதிய*
*அறம்பாட வந்த அறிஞன்; நாட்டிற்*
*படரும் சாதிப்படைக்கு மருந்து!*
*மண்டும் மதங்கள் அண்டா நெருப்பவன்;*
*அயலார் எதிர்ப்புக்கு அணையா விளக்கவன்;*
*என்னென்று சொல்வேன்! என்னென்று சொல்வேன்!*
*"தமிழால் பாரதி தகுதி பெற்றதும்*
*தமிழ்பா ரதியால் தகுதி பெற்றதும்!"*

(பாரதிதாசன் கவிதைகள்: தொகுதி-1)

என்று காணும் கவிதை அடிகளை ஊன்றி உணரும்போது இதை விடவா நான் சொல்லிவிட முடியும் என்று எண்ணிப் பார்த்தேன். ஆனாலும் பாரதியாரின் சிறப்புக்களில் எனக்குத் தெரிந்த சிலவற்றைச் சொல்ல விரும்புகின்றேன். இந்நன்னாளில் அன்னாரது நினைவைப் போற்றும் அஞ்சலியாகவும் கருதுகின்றேன்.

"பாட்டுக்கொரு புலவன் பாரதி" என்று கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையும், "சுப்பிரமணிய பாரதியார் தந்நிகரில்லாத் தமிழ்ப்புலவர்" என்று நாவலர் டாக்டர்.ச.சோமசுந்தர பாரதியாரும் குறிப்பிட்ட காலத்தில் பாரதியார் பாடல்கள் மக்கள் மனத்தகத்தே இன்று போல் மறக்க முடியாத நிலையில் இடம் பெற்றிருக்கவில்லை. "பாரதி பாட்டும் கவிதையாகுமா?"

என்று பழந்தமிழ்ப் புலவர் சிலர் ஐயவினா எழுப்பி எள்ளி நகையாடிய காலமுமாகும் அது!

ஆனால், இன்று பாரதியாரின் சிறப்பைப் பாவலரும் பாமரரும் பெரிதும் உணர்ந்துள்ளனர். இருபதாம் நூற்றாண்டில் செந்தமிழ் நாட்டில் தோன்றிய ஈடு இணையற்ற கவிஞர் பாரதியார் என்று போற்றுகின்றனர். "உலக மகா கவிஞருள் ஒருவர் அவர்" எனவும் சிறப்பிக்கின்றனர். காரணம் பாரதியாரைப் போலத் தான் வாழும் காலத்திற்கேற்ப - மக்களின் அறிவுக்கும், சுவைக்கும் உணர்ச்சிக்கும் ஏற்ப எளிய இனிய கவிதைகளை வேறு எந்தக் கவிஞனும் பாடவில்லை என்றால் அது மிகையாகாது.

வழிபாடு

எமக்குத் தொழில் கவிதை என்று சொல்லிக் கொண்டு புறப்பட்ட முதல் கவிஞர் பாரதி. இவரது சொல், செயல், எண்ணம், எழுத்து எல்லாமே கவிதையாக இருந்தன. சமுதாயப் பிரச்சினைகளைப் பாட அவர் தமது கவிதையைப் பயன்படுத்தினார்.

*"சுவை புதிது; பொருள் புதிது; வளம் புதிது;*
*சொல் புதிது; சோதி மிக்க*
*நவகவிதை எந்நாளும் அழியாத மாகவிதை"*

என்று தம் கவிதையைப் பற்றிக் கூறுவார். மக்கள் சமுதாயத்தை நேசித்துப் பாடிய பெரும் புலவர்களுள் ஒருவராகவும் திகழ்ந்தார். தமிழைக் காக்க அதன் பெருமையை நிலைக்கச் செய்யப் பாடுபட்டார். அந்தப் பணியில் வெற்றியும் பெற்றார்.

பராசக்தியிடம் பலர் பலவற்றை வேண்டுவார்கள். ஆனால், இவர் வேண்டுதலோ "எனக்குக் காணி நிலம் வேண்டும் எனத் தொடங்கி இவர் கேட்கின்ற பொருட்களைப் பட்டியல் போட்டுப் பார்த்தால் நாம் திகைத்துப் போவோம். இறுதியில் இவர் நெஞ்சத்தைக் கண்டு வியந்து நிற்கின்றோம்

*"................... என்றன்*
*பாட்டுத் திறத்தாலே - இவ்வையகத்தை*
*பாலித்திட வேண்டும்"*

என்கின்றார்.

எத்துணை பெரிய உள்ளம் அவருக்கு - பாருங்கள்! மனித நேயமிக்க மனிதர் அவர்! பாரதியார் சிறந்த கவிஞர் மட்டுமல்ல, அவர் ஒரு சிறந்த கட்டுரையாசிரியர்! இவை எல்லாவற்றுக்கும் மேலாக, பாரதியார் மனித நேயம் மிக்கவர்! ஆகையினால்தான் தம் பாடல்களால் இப்புவியினைக்

காத்து நிற்க வேண்டும் என்ற உயரிய நோக்கம் பாரதியிடம் இருந்தது. "தெய்வ பக்தியையும், தேசபக்தியையும் பிணைத்துப் பாடிய மகாகவி - அதையும் விடுதலைப் போர்க்களத்தில் நின்று பாடிய வீர கவி-வேறு நாடு எதிலேனும் பிறந்திருப்பானா என்பது ஐயப்பாடே. அது தமிழ் மண்ணுக்குள்ள தனிச் சிறப்பு" என்று சிலம்புச் செல்வர் மா.பொ.சி. பூரிப்புடன் மகிழ்வார்!

புதுவையிலிருக்கும் தேசமுத்து மாரியம்மனைப் பாரதி,

*"தேடி உனைச் சரணடைந்தேன் தேசமுத்து மாரி*
*கேடதனை நீக்கிடுவாய், கேட்ட வரம் தருவாய்"* என்று பாடுவார்.

*"துன்பமே இயற்கை எனும் சொல்லை மறந்திடுவோம்*
*இன்பமே வேண்டி நிற்போம்; யாவும் அவள் தருவாள்"*

என்று அறம் உணர்த்துவார்.

*"நம்பினார் கெடுவதில்லை, நான்கு மறைத் தீர்ப்பு*
*அம்பிகையைச் சரண் புகுந்தால் அதிக வரம் பெறலாம்"*

என்றும் பாடியுள்ளார். அம்பிகையை நம்பித் துதித்து அகம் குளிரப் பாடி காதலாகிக் கசிந்து நிற்போமாயின், அவள் அருள்தனைப் பெற்று அவனியில் உய்யலாம் என்பது முன்னோர் கண்ட நன்னெறி. அதை எடுத்துக் காட்டியவர் பாரதியார். பாரதி அடிமைத் தளத்தில் முடங்கிக் கிடக்கும் நாட்டு மக்களை எழுச்சியுறச் செய்ய வேண்டுமென எண்ணினார். எழுச்சிக்கும், ஏற்றத்திற்கும் அடிப்படை ஆற்றல், அதாவது சக்தி. எனவே ஆற்றலை வழங்கும் சக்தி வழிபாட்டைப் பாரதி விரும்பினார். வழிபாட்டைச் செய்தார், சக்தியைப் பெற்றார். அவர் மூலம் இந்த நாடும் சக்தியைப் பெற்றது. பாரதி பாடும் சக்தி எத்தகையது? அது எல்லையற்றது, அழிவில்லாதது. இந்தச் சக்திதனைத் தனது வசன கவிதையில் கூறுவார் -

*"மண்ணிலே வேலி போடலாம், வானத்திலே வேலி*
*போடலாமா?" போடலாம்,*
*மண்ணிலும் வானந்தானே நிரம்பி யிருக்கின்றது?*
*மண்ணைக் கட்டினால் அதிலுள்ள வானத்தைக்*
*காட்டியதாகாதா?*

*உடலைக் கட்டு, உயிரைக் கட்டலாம்.*
*உயிரைக் கட்டு, உள்ளத்தைக் கட்டலாம்.*
*உள்ளத்தைக் கட்டு, சக்தியைக் கட்டலாம்.*
*அந்த சக்திக்கு கட்டுப்படுவதிலே வருத்தமில்லை.*
*என் முன்னே பஞ்சுத் தலையணை கிடக்கிறது.*

*அதற்கு ஒரு வடிவம், ஓரளவு நியமனம்,*
*ஏற்பட்டிருக்கிறது.*
*இந்த நியமத்தை அழியாதபடி சக்தி பின்னே நின்று*
*காத்துக் கொண்டிருக்கின்றாள்.*
*மனிதஜாதி இருக்குமளவும் இதே தலையணை*
*அழிவெய் தாதபடி காக்கலாம்.*
*அதனை அடிக்கடி புதுப்பித்துக் கொண்டிருந்தால்,*
*அந்த "வடிவத்திலே" சக்தி நீடித்து நிற்கும்*
*புதுப்பிக்காவிட்டால் அவ்"வடிவம்"மாறும்.*
*அழுக்குத் தலையணை, ஓட்டைத் தலையணை, பழைய*
*தலையணை - அதிலுள்ள பஞ்சை யெடுத்துப் புதிய*
*மெத்தையிலேபோடு. மேலுறையைக் கந்தையென்று*
*வெளியே எறி, அந்த வடிவம்? அழிந்து விட்டது.*
*வடிவத்தைக் காத்தால்,*
*சக்தியைக் காக்கலாம்.*
*அதாவது சக்தியை அவ்வடிவத்திலே காக்கலாம்;*
*வடிவம் மாறினும் சக்தி மாறுவதில்லை.*
*எங்கும் எதனிலும் எப்போதும் எல்லாவிதத்*
*தொழில்களும்*
*காட்டுவது சக்தி.*
*வடிவத்தைக் காப்பது நன்று. சக்தியின் பொருட்டாக.*
*சக்தியைப் போற்றுதல் நன்று, வடிவத்தைக் காக்குமாறு.*
*ஆனால் வடிவத்தை மாத்திரம் போற்றுவோர் சக்தியை*
*இழந்து விடுவர்.*

(பாரதியார் வசன கவிதைகள் சக்தி -5)

என்று அழிவே இல்லாத சக்தியைப் (Energy) பற்றி கூறுகின்றார். உடல் அழிந்து விட்டாலும் ஆற்றல் அழிவதில்லை. அவ்வாற்றல் அல்லது சக்தி வேறு வடிவம் பெற்று என்றும் வாழ்கின்றது என்பதனைத் தான் பாரதி பழைய தலையணை, பஞ்சு, புதிய மெத்தை என்று ஒப்புமை காட்டிப் பாடுகின்றார்.

மேலும் சக்தியைப் பற்றி பாரதியார்,

*பராசக்தியைப் பாடுகின்றோம்.*
*இவள் எப்படி உண்டாயினாள்? அதுதான்*
*தெரியவில்லை.*
*இவள் தானே பிறந்த தாய். "தான்" என்றபரம் பொருளினிடத்தே*
*இவள் எதிலிருந்து தோன்றினாள்? "தான்" என்ற*
*பரம்பொருளிலிருந்து*

*எப்படித் தோன்றினாள்? தெரியாது.*
*படைப்பு நமது கண்ணுக்குத் தெரியாது! அறிவுக்கும் தெரியாது.*

என்று பாடுவது சக்தியின் அந்தம், ஆதி 'இல்லாதத் தன்மையையும், மொழிக்கும் நினைவிற்கும் எட்டாத் தன்மையையும் வெளிப்படுத்துவது ஆகும்.

பாரதியின் நூற்றாண்டு விழாவின்போது தவத்திரு குன்றக்குடி அடிகளார் கூறினார் - "வழிபாடு என்பது சடங்குகள் மட்டுமல்ல. அஃது ஓர் உயிரியல் முயற்சி. தாழ்ந்து கிடக்கும் உயிர் உயர்ந்து விளங்க வேண்டுமென்ற வேட்கையில் எல்லையற்ற பரம்பொருளைத் துணையாக நாடிப் பெறும் முயற்சியே வழிபாடு. கடவுளை முன்னிட்டுச்ர செய்யப் பெற்றாலும், வழிபாட்டின் பயன் உயிர்களுக்கேயாம். எல்லையற்ற பரம்பொருளின் ஆற்றலைச் சக்தி என்று கூறுவது தமிழர் மரபு. எல்லையற்ற பரம்பொருளின் ஆற்றலைச் சக்தி என்று கூறுவது தமிழர் மரபு. எல்லையற்ற பரம்பொருளுக்குச் சிவம் என்ற பெயரைத் தமிழர்கள் சூட்டினர். சிவத்தின் சக்தி அம்மை. நெருப்புக்கு சூடுபோல், சிவத்திற்குச் சக்தி. இன்றைய அறிவியல் உலகத்தில் "மேட்டர்" (Matter) என்று சொல்லக்கூடிய பொருளையும் "எனர்ஜி" (Energy) என்று பொருளின் ஆற்றலையும் தனியே பகுத்துக் காணும் மரபு வளர்ந்திருக்கின்றது. இம்முறையில்தான் பண்டைத் தமிழர்கள் சிவத்தைப் பொருளாகவும், அம்மையைப் பொருளின் ஆற்றலாகவும் கண்டு போற்றினர், வழிபட்டனர். அம்மை வழிபாடு ஆற்றலை வளர்க்கும். ஆற்றல் நிறைந்த மனித சமுதாயம் நல்லனவற்றைப் படைக்கும் ஆற்றலுடையதாகவும், தீயனவற்றை அழிக்கும் ஆற்றலுடையதாகவும் விளங்கும்" என்பதே தவத்திரு அடிகளார் கூறிய செய்தியாகும். (தவத்திரு குன்றக்குடி அடிகளார் "பாரதியின் சக்தி வழிபாடு", மகாகவி பாரதியார் நூற்றாண்டு விழா மலர், 1982 பக்கம் - 205)

ஆற்றல் மிக்க வாழ்க்கை உலகத்தையே வாழ்விக்கும். மாநிலம் பயனுற வாழ வகை செய்யும். ஆற்றலோடு வாழ்பவர்கள் நிலத்திற்குச் சுமை என ஒருபொழுதும் வாழமாட்டார். நிலத்திற்குப் பொருள் சேர்ப்பர்; புகழ் சேர்ப்பர்; நிலத்தின் பயனைக் கூட்டுவர். இங்ஙனம் பயனுற வாழ்வதற்காகச் செய்யும் வழிபாடே ஆற்றல் வழிபாடு; சக்தி வழிபாடு என்பது முன்னோர் கூற்று. இத்தகைய சக்தி வழிபாட்டினையே பாரதியார் தமது பாடல்களில் வலியுறுத்துகின்றார்.

(தொடரும்)

# ஔவையை மறந்த அவலம்!

(கவிவேந்தர். **கா. வேழவேந்தன்**)

•

அன்றொருநாள் விடிகாலை கடற்கரைக்குச் சென்றேன்;
அலைமீட்டும் இசைகேட்டே மெய்சிலிர்க்க நடந்தேன்;
நன்றியுடன் காஞ்சியண்ணன் தென்றமிழ்ச்சான் றோர்க்கே
நட்டுவைத்த சிலைகளினைக் கண்டுகண்டு நெகிழ்ந்தேன்!
இன்றுவரை கடற்கரையின் ஏற்றத்தைக் காணா
எழிற்கோவை மாணவியர் இருவர்வந்து சேர்ந்தார்;
"நின்றிருக்கும் நேர்த்திமிகு சிலைகளுக்கே இடையில்
நிமிராத கூன்கிழவி யாரென்றாள்?" ஒருத்தி.

"எனக்குமட்டும் தெரிவதுண்டா" பீடத்தின் கீழே
இழைத்திருக்கும் அவள்பெயரைப் படி!" என்றாள் தோழி!
மனக்கணக்கைப் போடுவது போல்எழுத்தைக் கூட்டி,
மாணவியும் "ஒ"வ்வொன்றும் "ள"வென்றும் பிரித்தே
கனித்தமிழ்த்தாய் ஔவையவள் தனிப்பெயரைக் குதறிக்
கண்டபடி உளறிவைத்தாள்; உளம்நொறுங்கிப் போனேன்!
இனிக்கின்ற "நல்வழியை" "மூதுரை" யைத் தந்த
எம்அன்னை பெயர்அறியா இழிநிலைக்கே நொந்தேன்!

சேச்சேச்சே! தமிழ்மண்ணில் "ரெயின்ரெயின்கோ" என்றே
தேம்கூமொழி பயில்வதனால் நீதிநெறி எங்கே?
பூச்சரமாய் மணம்பரப்பும் புனல் "ஆத்திசூடி"
புகழ்"கொன்றை வேந்த" னைநாம் கற்பிக்க மறந்தோம்!
பேச்செதற்கு? நாம்ஊன்றும் விதைதானே விளைந்து
பின்னரிங்கே அறுவடையாய் நம்கையில் சேரும்!
மூச்சான தாய்மொழியை நாம்மறந்தால் அழிவே;
முன்னேறும் நாடெல்லாம் தரும்பாடம் இதுவே!

—

(சென்ற இதழ் தொடர்ச்சி)

# குன்றக்குடிக் குடைவரைகளும் கல்வெட்டுகளும்

(டாக்டர். மு. நளினி, டாக்டர். இரா. கலைக்கோவன்)

## முருகன்

மேற்குக் காவலரின் வலப்புறமுள்ள பாறைச்சரிவில் சிறிய வடிவினராய் நான்கு கைளுடன் சமபாத நிலையிலுள்ள முருகனைச் சென்னியும் இடப்பின்கையிலுள்ள சிறிய அளவிலான முத்தலை ஈட்டியும்[26] அடையாளம் காட்டுகின்றன. வலப்பின்கை கடக முத்திரையிலுள்ளது. இக்கையின் மேற்பகுதியில் காட்டப்பட்டுள்ள கருவியை அடையாளம் காணமுடியவில்லை.[27] இடமுன்கை கடிய வலம்பிதத்தில் இருக்க, வலமுன்கை கடகத்தில் உள்ளது.[28]

செவிகளில் பனையோலைக் குண்டலங்கள்; அரைக்கச்சு இருத்தும் அரையாடையும் இடைக்கட்டும் உபவீதமாய் முப்புரி நூலும் கொண்டுள்ள இவரது தலையைக் கரண்டமகுடம் அணி செய்கிறது. கழுத்தில் சரப்பளி. தமிழகக் குடைவரைகளில் முருகப் பெருமானின் சிற்பவடிவங்கள் மிகக் குறைந்த அளவிலேயே இடம் பெற்றிருப்பதால் இளநகை ததும்பும் இச்சிற்பம் சிறப்புக்குரியதாகிறது.

## பிள்ளையார்

கிழக்குக் காவலரின் இடப்புறப் பாறைச்சரிவில், அர்த்த பத்மாசனத்தில் உள்ள பிள்ளையாரின் வலக்கையில் மோதகம்; இடக்கையைத் தொடைமேல்[29] இருத்தியுள்ளார்.[30] இடத்தந்தம் உடைந்துள்ளது; துளைக்கை வலம்புரியாகக் காட்டப்பட்டுள்ளது. கரண்டமகுடமும் உபவீதமாய் முப்புரிநூலும் உதரபந்தமும் கங்கணங்களும் வளைகளும் அணிந்து தளத்தின்மீது அமர்ந்துள்ள இவர் கழுத்தில் பெரிய அளவிலான ருத்திராக்கங்கள் கோத்த மாலை. இது போன்ற ருத்திராக்க மாலையணிந்த பிள்ளையாரைப் பல்லவர் பகுதியில் பார்த்ததில்லை.

## முகமண்டபச் சிற்பங்கள்

முகமண்டபச் சிற்பங்களின்மீது கனமான சுதை பூசப்பட்டு வண்ணம் தீட்டப்பெற்றுள்ளது. சில இடங்களில் இச்சுதை சிதைந்து திருமேனிகளின் மெய்யான தோற்றம் தெளிவாய்த் தெரிகிறது.

## திருமாலும் கருடனும்[31]

மேற்குக் கோட்டத்தின் பெரும்பகுதியில் நெடிய திருமேனியராய் முகத்தைச் சற்று வலப்புறம் சாய்த்த நிலையில் திருமாலும் அவருக்கு இடப்புறத்தே அணுக்கமாகச் சற்றுச் சிறிய அளவில் மனித வடிவில் கருடனும் ஏறத்தாழ இரண்டாம் குடைவரையில் இருப்பது போலவே காட்டப்பட்டுள்ளனர். திருமாலின் வலப்பாதம் நேராக இருக்க, இடப்பாதம் பார்சுவத்தில் உள்ளது. கச்சம் வைத்த கனமான இடுப்பாடை நடுவில் மடிப்புகளுடன், கணுக்காலுக்குச் சற்று மேல் வரை காட்டப்பட்டுள்ளது. இதன் கீழ்மடிப்பும் கனமாக உள்ளது. இடைக்கட்டு அணிகலன் போல அலங்கரிக்கப்பட்டுள்ளது.

வலமுன்கையைக் கடியவலம்பிதத்தில் கொண்டுள்ள இறைவன் இடமுன்கையை அருகே உள்ள கருடனின் வலத்தோளின் மேல் மென்மையாக அமர்த்திக் கையின் கீழ்ப்பகுதியை, உள்ளங்கை கருடனைப் பார்த்திருப்பது போல் நெகிழ்கையாய்த் தாழ்த்தியுள்ளார்.[32] இருசெவிகளையும் மகரகுண்டலங்கள் அலங்கரிக்கக் கிரீடமகுடராய், உபவீத முப்புரிநூலும் உதரபந்தமும் சரப்பளியும் முத்தாரமும் அணிந்துள்ள இப்பெருமானின் பின்கைகளில் வலப்புறம் சக்கரம், இடப்புறம் சங்கு, அரைக்கச்சின் யாப்பு புலிமுகம் பெற்றுள்ளது. தோள்களின் இருபுறமும் ஸ்கந்தமாலை.

சிற்பம் முழுவதும் சுதை பூசப்பட்டிருப்பதால் அணிகலன்கள் மெய்யானவையா அல்லது சுதையால் உருவாக்கப்பட்டவையா என்பதை அறியமுடியவில்லை.

கருடாழ்வார் வலப்பாதத்தை நேராக வைத்து இடப்பாதத்தைப் பார்சுவத்தில் திருப்பியுள்ளார். பூட்டுக்குண்டலங்கள் செவிகளை அலங்கரிக்க, கரண்டமகுடராய்க் கைகள் இரண்டையும் குறுக்கீடு செய்து உள்ளங்கைகளை மார்பில் பதித்துப் பத்திமையுடன் காட்சியளிக்கும் இவரது முகம் கூச்ச உணர்வுடன் இடப்புறம் சாய்ந்துள்ளது. இடப்புற இறக்கை மடிந்த நிலையில் காட்டப்பட்டுள்ளது.

## இலிங்கோத்பவர் தொகுதி

முகமண்டபப் பின்சுவரில் தெற்கு நோக்கிய நிலையில் கருவறை வாயிலின் வலப்புறத்தே இத்தொகுதி அமைந்துள்ளது. இத்தொகுதியில் நடுநாயகமாகப் பேரளவில் இலிங்கோத்பவரும் வலப்புறத்தே நான்முகனும் இடப்புறத்தே திருமாலும் காட்டப்பட்டுள்ளனர். இலிங்கோத்பவரின் முகத்தில் சுதை பெரும்பாலும் அகன்றுள்ளதால் மெய்க்கோலம் கண்டு மகிழமுடிகிறது.

இந்த இலிங்கோத்பவர் வடிவம் சற்று மாறுதலானது. தொடக்கக் கால இலிங்கோத்பவர் வடிவங்களுள் ஒன்றாய் இதைக் கொள்ளலாம். இது போன்ற வடிவங்கள் பிள்ளையார்பட்டியிலும் திருமெய்யத்திலும் உள்ளன. கீழ்ப்பகுதி இலிங்கத் திருமேனியாய் அமையப் பிளந்திருக்கும் அம்மேனியிலிருந்து பரவும் மனித வடிவாய்த் தொடையளவினராய்ச் சிவபெருமான் காட்சியளிக்கிறார்.

வலமுன்கை ஆகூயவரத முத்திரையில் நெகிழ்கையாகத் தாழ, இடமுன்கை கடியவலம்பிதமாய்[33] இருக்கப் பின்கைகளில் வலப்புறம் மழுவும் இடப்புறம் மானும் சுதையில் காட்டப்பட்டுள்ளன. இறைவனின் சடைபாரத்துக்கு மேல் சுதையில் ஒளிவட்டம் காட்டப்பட்டுள்ளது. இதன் வலப்புறம் அன்னமொன்றும் சுதையில் வடிக்கப்பட்டுள்ளது. உதரபந்தமும் உபவீதமாய் முப்புரிநூலும் காட்டப்பட்டுள்ளன. வலச் செவியை மகரகுண்டலமும் இடச்செவியைப் பனையோலைக் குண்டலமும் அழகுசெய்கின்றன.

சிவபெருமானின் வலப்புறம் மூன்று திருமுகங்களுடன் முன் கைகள் இரண்டையும் மார்பருகே வணக்க முத்திரையில் காட்டிப் பின்கைகளில் வலப்புறம் அக்கமாலையும்[34] இடப்புறம் கமண்டலமும் கொண்டு, சமபாதராய்க் காட்சிதரும் நான்முகனின் கச்சம் வைத்த பட்டாடை முழங்காலுக்குச் சற்றுக் கீழ்வரை காட்டப்பட்டுள்ளது.

சிவபெருமானின் இடப்புறம் அதே போல் முன்கைகளை வணக்க முத்திரையில் கொண்டு, பின்கைகளில் வலப்புறம் சக்கரமும் இடப்புறம் சங்கும் ஏந்திக் கிரீட மகுடமும் கச்சம் வைத்த பட்டாடையுமாய்த் திருமால் காட்சி தருகிறார்.

## கொற்றவைத் தொகுதி

கருவறை வாயிலின் இடப்புறத்தே முகமண்டபத்தின் பின் சுவரில் கொற்றவையும் அடுத்து சங்கரநாராயணரும் காட்சி தருகின்றனர். மகிடத்தின் தலைமேல் நிற்கும் கொற்றவையின் வலப்பாதம் திரயச்ரமாகத் திரும்ப, இடப்பாதம் நேராக உள்ளது. கரண்டமகுடம், பனையோலைக் குண்டலங்கள், நெற்றிக்கண், கோரைப்பற்கள் இவற்றுடன் பல அணிவகைகளும் மார்புக் கச்சும் அணிந்தவராய்க் காட்சிதரும் கொற்றவையின் தலைக்கு மேல் குடையொன்று காட்டப்பட்டுள்ளது. அம்மையின் தோளுக்குப் பின்னால் அம்புகள் நிறைந்த கூடுகள்.

எட்டுத் திருக்கைகளில் வலமுன்கை அருட்கையாய்த் தாழ்ந்திருக்க வலப்பின்கைகளில் மூன்றாவதில் வாளும் நான்காவதில் எறிநிலைச் சக்கரமும் உள்ளன. இரண்டாம் வலக்கையில் உள்ள கருவியைச் சுதை பூசப்பெற்றிருப்பதாலும் ஒருபகுதி சிதைந்திருப்பதாலும் உறுதியாக இன்னதென்று அடையாளம் காண முடியவில்லை.[35] இடமுன்கையில் தலையோடு[36] இடப்பின் கைகளில் கீழிருந்து மேலாக வில், கேடயம், சங்கு ஆகியன உள்ளன.

அம்மையின் இருபுறமும் அடியவர் இருவர் பக்கத்திற் கொருவராகக் குத்துக்காலிட்டு அமர்ந்துள்ளனர். வலப்புறம் உள்ளவர் தலைமுடியை இடக்கையால் பிடித்துக்கொண்டு வலக்கையால் கழுத்தை அறுத்துக் கொற்றவைக்குத் தரும் செயற்பாட்டில் இருக்கிறார். சடை பாரத்தோடு இருக்கும் இடப்புறத்தார், கைகளில் சிறு பாத்திரமொன்றை ஏந்தியுள்ளார்.[37]

சங்கரநாராயணர்[38]

சமபாதராய் நிற்கும் சங்கரநாராயண வடிவத்தின் வலப்புறத்தைச் சிவபெருமானும் இடப்புறத்தைத் திருமாலும் பங்கிட்டுக் கொள்கின்றனர். புலித்தோலாடையும் சடைமகுடமும் நெற்றிக்கண்ணும் கொண்டிலங்கும் சிவப்பகுதியின் வலமுன்கைக் காட்டும் குறிப்பை ஆகூயவரதமாகக் கொள்ளலாம். வலப்பின்கைக்கு உரியதாய்ச் சுதை விழுந்த இடத்தில் நீளமான மழுவைக் காணமுடிகிறது. இது தவிர சுதையாலான சிறு மழுவொன்றும் உள்ளது. திருமால்பகுதி கிரீட மகுடமும் பட்டாடையும் கொண்டு பின்கையில் சங்கேந்தி இடமுன்கையைக் கடியவலம்பிதத்தில்[39] கொண்டுள்ளது. இவ்வடிவத்தின் இருசெவிகளையும் மகரகுண்டலங்கள் அலங்கரிக்கின்றன. உதரபந்தமும் உபவீதமாய் முப்புரிநூலும் அணிகலன்களும் கொண்டுள்ள இவ்வடிவம் பல்லவக் குடைவரைகளில் காணப்பெறாத திருத்தோற்றமாகும்.

சிவபெருமானின் ஆடல் தோற்றம்

முகமண்டபக் கிழக்குச் சுவர் முழுவதும் சிவபெருமானின் ஆடல்தோற்றம் பரவியுள்ளது. ஆடும் பெருமானின் கீழே இருபுறத்தும் அமர்நிலையில் பக்கத்திற்கொருவராய் இசைக்கலைஞர்கள், வலப்புறம் இருப்பவர் தம் கால்களுக்கிடையில், ஒரு கண் முழவுகள் இரண்டை அருகருகே நிறுத்திக் கால்களால் அணையிட்டு இறையாடலுக்கு இசையெழுப்பும் முயற்சியில் ஈடுபட்டுள்ளார். இடக்கை ஒரு முழவின்மீது பட்டு இசையெழுப்ப, வலக்கை அடுத்த தட்டுக்காக உயர்ந்துள்ளது.

சடைபாரத்துடன் இருசெவிகளிலும் பனையோலைக் குண்டலங்கள் அணிந்து, வலப்புறம் இலேசாய்ச் சரிந்த சிரித்த முகத்துடன் காட்சியளிக்கும் இவ்வடிவம் இயக்கும் முழவுகள், குடமுழவுகளை ஒத்திருப்பினும் ஒன்றிலிருந்து ஒன்று வடிவத்திலும் அலங்கரிப்பிலும் வேறுபட்டுள்ளன.

இடப்புறப் பூதநாயகர் இலலிதாசனத்தில் இறைவனின் ஆடலைத் தலை நிமிர்த்திக் கண்டவாறே, கைகளில் உள்ள தாளங்களை இயக்குகிறார். புடைத்த வயிறும் சடை பாரமுமாய்க் காட்டப்பட்டிருக்கும் இவர் செவிகளிலும் பனையோலைக் குண்டலங்கள். இடுப்பில் ருத்திராக்கங்களாலான அரையணி.

இந்த இருவரும் தரும் தாளத்திற்கேற்ப ஆடும் சிவபெருமானின் அர்த்தஸ்வஸ்திகம்[40] உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் விதத்தில் பரவியுள்ளது. இந்தக் கரணம் இராஜசிம்மர் காலக் கற்றளிகள் சிலவற்றில் பல்லவப் படைப்பாய் மிளர்வதை இங்கு நினைவுகூரலாம். ஆடும் இறைவனைச் சுற்றிலும் சுதையில் திருவாசிச் சுடர்கள் காட்டப்பட்டுள்ளன. இவை சில இடங்களில் உதிர்ந்திருப்பதால் முதல் வடிவத்தில் இச்சுடர்கள் இடம்பெறவில்லை என்பதும் பின்னாளைய சுதைப்பூச்சின் போது மேற்கொள்ளப்பட்ட அலங்காரமே இது என்பதும் புலனாகின்றன. சுதையை முற்றிலுமாய் நீக்கினாலொழிய இந்த இறைவடிவத்தின் முழுமையை உணர்ந்து மகிழ முடியாது.

எட்டுத் திருக்கைகளில் வலமுன்கை மார்பருகே தர்ஜனியாய்[47] அமைய, வலப்பின்கைகளில் கொடித்தண்டு[42] மழு, துடி உள்ளன. இடமுன்கை அர்த்தரேசிதமாய்[43] எழுந்து தாழப் பிற பின்கைகளில் பாம்பு, தீ, ஓலைச்சுவடி[44] மண்டல நிலையில், இடப்பாதத்தைப் பார்சுவமாக்கி, வலக்காலை இடக்காலின் பின்னால் குறுக்கீடு செய்து, இடப்பாதத்தின் விரல்களை அக்ரதலசஞ்சாரத்தில் நிறுத்தியுள்ள இறைவனின் இந்த ஸ்வஸ்திகப் பாதநிலை அற்புதமானது. செவிகளில் வலப்புறம் பனையோலைச் சுருள்; இடப்புறம் மகரக்குழை[45]. வரிசையாய் அடுக்கிய கொக்கிற்கும் செருகிய ஊமத்தம் பூக்களும் கொண்ட மகுடத்தையும் மீறி, ஆடலின் விரைவுக்கேற்ப இருபுறமும் அலைபாயும் விரிசடைக் கற்றைகள், தலை இடப்புறச் சாய்வாக இருந்தாலும் முகம் இலேசாகவே திரும்பியுள்ளது. இதழ்களின் விரிவில் விளைந்திருக்கும் புன்னகை இறைவனின் முகத்தோற்றத்திற்கு எழில் கூட்டுகிறது.

(தொடரும்)

# குன்றக்குடி அருள்தரு சண்முகநாதப் பெருமான்
# உயிர் வருக்க மாலை

**(மரு. பரமகுரு)**

*அழகனைத்தும் ஆனானை, தூய நெஞ்சத்*
*தன்பருக்குக் கருணைவான் மழைபோல் வானை*
*பழுநியசெந் தமிழ்ப்பாடற் குருகு வானை*
*பழவினைநோய் தீர்க்கும்அரு மருந்தா னானை*
*தொழுதழுவார் கண்ணீரைத் துடைப்பான் தன்னை*
*சொல்லரிய அருட்கடலை, சுடர்வே லானை*
*செழுங்கமல மலர்களில்தே னுண்டு வண்டு*
*திளைக்கும்குன் றக்குடியில் கண்டேன் யானே!*

*ஆறுதலை யுடையபிரான் நெற்றிக் கண்ணில்*
*அனற்பொறியாய் உதித்தானை, சரவ ணத்தில்*
*ஆறுமக வாய்த் தவழ்ந்த அழகின் வைப்பை,*
*அம்மைதரு ஞானப்பா லமுதுண் டானை*
*ஏறுமயில் வாகனனை அன்னை சக்தி*
*எடுத்தளித்த வேல்கொண்ட வீரச் சேயை*
*சேறுமலர் தாமரையில் வண்டு மொய்க்கும்*
*சீரார்குன் றக்குடியில் கண்டேன் யானே!*

*இமயவல்லி பாலகனை, அறுமீன் தந்த*
*இனியநறும் பாலுண்டு வளர்ந்த சேயை,*
*திமிர்பிடித்த நான்முகனின் தலையில் குட்டிச்*
*சிறையிட்ட பரம்பொருளை, முருக வேளை,*
*இமையவர்சே னாபதியை மந்தி தாவி*
*இளம்தென்னம் பாளையிலே ஏறிப் பாய*
*உமிழ்ந்தமதுத் துளிகுளத்தில் வீழ மீன்கள்*
*உண்ணும்குன் றக்குடியில் கண்டேன் யானே!*

*ஈராறு கையானை, ஐந்து கையாற்*
*கிளையானை வள்ளிமொழிக் கேங்கு வானை,*
*தீராத மருதுவின்நோய் திருநீ றிட்டுத்*
*தீர்த்தானை, பிணிவறுமை துன்ப நீக்கம்*
*ஏராரும் குழந்தைவரம் நல்கு வானை*
*இருவினையும் கடிந்துயிர்கட் கருள்செய் வானை*
*ஆரல்நிறை ஏரிகளால் வளம்பெற் றோங்கும்*
*அழகியகுன் றக்குடியில் கண்டேன் யானே!*

**உ**லகமுத லானவனை, உயிர்கள் தோறும்
ஒன்றாகி உடனாகி வேறா னானை,
விலைமதிக்க வொண்ணாத மாணிக் கத்தை,
விளங்**குப்பரங் குன்றி**ருக்கும் பரனை, தேவர்
குலமாதை மணம்புரிந்த குமர வேளை
குயில்பாட மயிலினம்கூத் தாட இன்பக்
கலைவாழும் புலமான சோலை சூழ்ந்த
கவினார்குன் றக்குடியில் கண்டேன் யானே!

**ஊ**ழிக்கூத் தாடுகின்ற ஒருவன் தந்த
ஒளிமகனை, ஓங்கார வடிவ மான
வேழமுகன் தம்பியினை, வேலெடுத்து
வேரொடு சூரழித்த தேவ தேவை,
ஆழிச்சீ **ரலைவாயில்** அமர்ந்து மக்கட்
கருள்பொழியும் ஆண்டவனை, அண்டம் யாவும்
கோழிமணிக் கொடியுயர்த்திச் செங்கோ லோச்சும்
கோவினைக் குன் றக்குடியில் கண்டேன் யானே!

**எ**ழுதரிய ஓவியத்தை, மறைகள் எல்லாம்
இயம்பரிய பரம்பொருளை, ஈசன் கையின்
பழம்விரும்பி மயிலேறி அண்ட மெல்லாம்
பம்பரமாய் வலம்வந்த எம்பி ரானை,
**பழனிமலை** யாண்டவனை, ஒப்பில் ஞானப்
பழமாகத் திகழ்பவனை, பசுமை போர்த்த
கழனிகள்சூழ்ந் தெழில்கொழித்துக் கண்ணும் நெஞ்சும்
கவரும்குன் றக்குடியில் கண்டேன் யானே!

**ஏ**டுடைய மலரெடுத்துப் போற்று வார்தம்
இதயத்தில் இருப்பானை, தினைப்பு னத்து
வேடிச்சி வள்ளியையும் வான மங்கை
மெல்லியல்தெய் வானையையும் மணம்செய் தானை
நாடிவந்த தந்தைக்குக் குருவா னானை,
ஞானமணம் கமழ்**ஏர கத்தி** னானை
ஓடைமலர்த் தேனுண்டு வண்டு றங்கும்
உளம்கவர்குன் றக்குடியில் கண்டேன் யானே!

ஐயத்தின் நீங்கிநன்கு தெளிந்தார் சித்தம்
அறிந்துணரும் ஞானவடி வாயி னானை
வையத்தில் கண்கண்ட கடவு ளான
மயில்மலையா னைக்குன்று தோறும் ஆடும்
தெய்வத்தைத் தீந்தமிழின் தத்து வத்தை
சிங்கார வேலனைச்செம் பவளக் குன்றை
கைவைத்தால் நீர்சுரக்கும் பூமி யான
கருணைக்குன் றக்குடியில் கண்டேன் யானே!

ஒளிவெளிநீர் மண்விண்ணும் ஆயி னானை,
உலகமெலாம் ஆக்கியும்காத் தும்கரந்தும்
விளையாடும் தலைவனை, வாழ் முதலை, அன்பில்
விளைகின்ற ஆரமுதை மெய்ஞ்ஞா னத்தின்
முளையான பூஞ்சுடரை, அருவி பொங்கி
முழங்குபழ முதிர்சோலை மலையின் வாழ்வை,
வளையணிந்த உழத்தியர்கண் கயலாய்த் தோன்றும்
மணிநீர்க்குன் றக்குடியில் கண்டேன் யானே!

இசைஒலி யானானை ஒப்பில் லானை
உண்மைஅறி வானந்த மாயி னானை
மாசில்லா மனத்திலும் மயிலின் மேலும்
மகிழ்ந்தேறி யமர்ந்தருளும் மாட்சி யானை
வீசுமொளி வேல்வாங்கி அண்ட கூடம்
வெடிபடவெஞ் சூர்தடிந்த விறல்மிக் கோனை
பூசைமணி யோசைதிசை எதிரொ லிக்கும்
புண்ணியக்குன் றக்குடியில் கண்டேன் யானே!

ஔவைக்குச் சுட்டபழம் அருளி னானை
அழுக்குமலம் கழுவிஉயிர் ஆட்கொள் வானை
நவ்விவிழி தெய்வானை வள்ளி யோடு
ஞானவடி வேல்ஒளிர மயில்மேல் வீற்ற
செவ்வேளை, அறுமுகமும் பன்னி ரண்டு
திருக்கரமு மாய்த்திகழும் சிவனை, யாரும்
எவ்வகையில் ஏத்திடினும் எடுத்தாள் வானை
எழிலார்குன் றக்குடியில் கண்டேன் யானே!

---

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# கம்பன் என்றொரு மானிடன்

(தமிழாகரர்.பேராசிரியர். **சாமி. தியாகராசன்**)

இராமகாதை மக்கள் மத்தியில் பரவத் தொடங்கிய காலத்திலிருந்து இன்று வரை இரண்டு நிகழ்ச்சிகள் வாதப்பிரதிவாதங்களுக்கு உட்பட்டு உள்ளன. ஒன்று இராமன் வாலியைக் கொன்றது சரியா? தவறா? என்பது; மற்றொன்று தன்னை வளர்த்து ஆளாக்கிய தமையனை விட்டுவிட்டு வீடணன் இராமன் பக்கம் சென்று சேர்ந்தது சரியா? தவறா? என்பது.

முதலில் உள்ளது அறத்தின் நாயகன் எனப் போற்றப்படும் இராமனுக்கு இழுக்குக் கூறும் நிகழ்ச்சி. வாலி வதம் பற்றி இரண்டு கூறுகள் சொல்லப்படுகின்றன. வாலிவதம் சரியா? தவறா - என்பது ஒன்று. மற்றொன்று வாலியைக் கொல்ல இராமன் ஏன் மறைந்து நின்றான் என்பது. ஏன் மறைந்து நின்றான் என்பது பற்றிய ஆய்வே இங்கு மேற்கொள்ளப்படுகிறது.

வாலியைக் கொல்ல இராமன் ஏன் மறைந்து நின்றான் என்பதற்கு இரண்டு விடைகள் சொல்லப்படுகின்றன. ஒன்று வாலி பெற்றிருந்த வரபலம் கருதியே ஒளிந்து நின்றான் என்பது. மற்றொன்று வாலி தன்முன் வந்து சரணாகதி கூறினால், வாலியைக் கொல்வேன் என்று சுக்ரீவனுக்குத் தான் தந்த வாக்கினைக் காப்பாற்ற முடியாது போகும், ஆதலால் மறைந்து நின்றான் என்பது.

இந்த இரண்டு காரணங்களின் வன்மை மென்மைகளை ஆராய்வோம். வாலி சரணாகதி கூறினால் அவனைக் கொல்ல முடியாத சூழ்நிலை ஏற்படும், அதனால் மறைந்து நின்றான் என்னும் கருத்தை முதலில் எடுத்துக் கொள்வோம்.

வேடர் போல மறைந்து நின்று என்மேல் அம்பு எய்தியது ஏன்? என இராமனை நோக்கி வாலி கேட்ட கேள்விக்கு இராமன் பதில் சொல்வதற்கு முன் இலக்குவன் பதில் சொல்கின்றான்.

"முன்புநின் தம்பி வந்து சரண்புக முறைஇ லோயை
தென்புலத்து உய்ப்பன் என்று செப்பினன் செருவில் நீயும்
அன்பினை உயிருக்காகி அடைக்கலம் யானும் என்றி
என்பது கருதி அண்ணல் மறைந்து நின்று எய்ததென்றான்"

என்பது இலக்குவன் சொல்லிய பதிலாகும். முன்பு உன் தம்பி வந்து சரண்புகுந்தான் (அப்போது அவனிடம்) முறையில்லாத உன்னைக் கொல்வதற்காக என் அண்ணன் வாக்களித்தான். இப்போது நேரே வந்து போர் செய்தால் நீ என் அண்ணனைக் கண்டதும் உன் உயிரின் மீது பற்றுக் கொண்டு சரணாகதி வேண்டும் என்று கேட்டால் என்ன செய்வது என்பது எண்ணியே மறைந்து நின்று அம்பு எய்தான் என்பது இந்தப் பாடலுக்கான பொருள். இப்பாடலில் வாலியின் வரபலம் பற்றிக் குறிப்பில்லை என்பதைக் கவனிக்க வேண்டும்.

இராமன் சரணாகதி நாயகன் என்பதையும், வாய்மை காப்பவன் என்பதையும் முறையில்லாதவனைத் தண்டித்து அறத்தை நிலை நாட்டுவோன் என்பதையும் இப்பாடலில் எடுத்துக்காட்டுகின்றான் இலக்குவன்.

இலக்குவன் பதிலை அப்படியே ஏற்றுக்கொள்ள வேண்டும் எனச் சொல்லும் இவர்களிடம், இதே பதிலை இராமன் சொல்லியிருந்தால் அதனால் வரும் இழுக்கு என்ன? குறை என்ன? என்று கேட்டால், தான் இத்தகைய குணங்கள் உடையவன் என்பதைத் தன் வாயாலேயே இராமன் சொன்னால் அது தன் பெருமைக் குணங்களைத் தானே எடுத்துச் சொன்னதாக முடியும். இது தற்புகழ்ச்சியின்பாற்படும். ஆதலால் இராமன் தானே சொல்லாமல் இலக்குவனைச் சொல்லவிடுத்து வாளா இருந்தான் என்கின்றனர்.

மேலும் அவர்கள், தமிழ்நாட்டில் கம்ப இராமாயண விரிவுரையாளர்கள் இலக்குவன் விடையை அலட்சியப்படுத்தியே இதுவரை வாலி வதைக்குக் காரணம் கூறிவந்துள்ளனர் என்றும்; இலக்குவன் கூற்றைப் பொய் எனக் கூறக்கூடாது என்றும்; அவ்வாறு சொன்னால் அது கம்பனுக்கு இழுக்கு என்றும், கம்பனுக்கு மதிப்பளிப்பதாக இருந்தால் இலக்குவன் விடையை முழு உண்மை என்றே கொள்ள வேண்டும் என்றும் உறுதிபடக் கூறுகின்றனர்.

இவர்கள் கூறும் கருத்துக்களைப் பற்றிச் சிந்திப்பது நமது கடமையாகிறது. தற்புகழ்ச்சி என்றால் என்ன? ஒருவன் தன் தகுதிகளைத் தானே புகழ்ந்து கூறுவது தற்புகழ்ச்சி எனப்படும். புகழ்ந்து என்ற சொல் மிகைபடக் கூறல் என்பதைச் சுட்டி நிற்கிறது.

இலக்குவன் சொன்னவற்றை இராமன் சொல்லியதாக மாற்றிப் பார்ப்போம். "உன் தம்பி என் துணைவேண்டி என்னிடம் அடைக்கலம் புகுந்தான். முறை தவறிய (அவன் மனைவியைப் பெண்டாகக் கொண்டு, அவனை மன்னிக்க மறுத்த) உன்னைக் கொல்வேன் என அவனுக்கு வாக்குத் தந்தேன். இந்த நிலையில் நீயும் வந்து சரண்புகுந்தால் என்ன செய்ய முடியும்? உன்னைக் கொல்லுவேன் என்ற எனது வாக்கை மீறி

உனக்கு அடைக்கலம் தர முடியுமா? முடியாதே. ஆதலால் மறைந்து நின்று அம்பு எய்தேன்" என்று இராமன் கூறினான் என்று கொள்வோம்.

இவ்வாறு கூறுவதில் என்ன தற்புகழ்ச்சி இருக்கிறது. இல்லையே. மாறாக நடந்த நிகழ்ச்சிகள்தான் சொல்லப்படுகின்றன. நடந்த நிகழ்வுகளைக் கூறுவதற்கும், புகழ்ந்து கூறுவதற்கும் மிகப் பெரிய வேறுபாடு உண்டே. இந்தக் கூற்றில் தன்னை மிகுத்து இராமன் கூறுகின்றான் எனச் சொல்ல இடமுண்டா? இல்லையே. உண்மையைக் கூறுவதற்கும் தன்னைப் புகழ்ந்து சொல்வதற்குமான வேறுபாட்டை உணராது போனதால் இலக்குவன் கூற்றை ஏற்போர் மயங்கத் தலைப்பட்டவராகக் காட்சியளிக்கின்றனர். ஆதலால் அவர்கள் வாதம் வலுவிழந்து போகிறது.

மேலும், இலக்குவன் விடையை அப்படியே கொண்டால் ஆய்வுக்கு வேலையே இல்லை என்பது தெளிவு. ஆனால் காலம் காலமாக இலக்குவன் விடையை ஆய்வு செய்கிறார்களே, அவர்களெல்லாம் கம்பனைக் கற்காதவர்களா என்ன?

இலக்குவன் சொல்லிய விடைக்கான காரணம் சரி என்பார் கூற்றில் வலுவில்லை என்பதால் அதனை விடுத்து, அவன் விடைக்கான காரணம் ஏற்க இயலாது என்பார் கூற்றை இனிக் காண்போம்.

(தொடரும்)

---

## அன்பான வேண்டுகோள்!

*சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.*

*ஆயுள் சந்தாவாகவோ, ஆண்டுச் சந்தாவாகவோ புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.*

**– ஆசிரியர்**

உ
சிவமயம்



திருக்கயிலாய பரம்பரைத் திருவண்ணாமலை ஆதீனம் -
பிரான்மலை வகை ஐந்து கோயில்கள் குன்றக்குடி
அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருக்கோயில்

# பங்குனி உத்திரப் பெருந்திருவிழா

(திருவள்ளுவராண்டு 2038 பங்குனி 9 முதல் 18 வரை)
(23-3-2007 முதல் 1-4-2007 வரை)

## திருநாள் விவரம்

| நாள் | திருநாள் | நேரம் | வாகனம் |
|---|---|---|---|
| பங்குனி 9 வெ 22.3.2007 | 1 | காலை 5.0க்குமேல் 5.45 மணி | கொடியேற்றம் |
| பங்குனி 14 புதன் 28.32007 | 6 | இரவு 8 மணி | ருத்திராட்சக்கேடகம் |
| பங்குனி 15 வியா 29.3.2007 | 7 | இரவு 8 மணி | தங்கரதம் |
| பங்குனி 16 வெள் 30.3.2007 | 8 | இரவு 8 மணி | வையாபுரியில் தெப்பம் வெள்ளிரதம் |
| பங்குனி 17 சனி 31.3.2007 | 9 | மாலை 3.30 மணி | திருத்தேர் |
| பங்குனி 18 ஞாயிறு 1.4.2007 | 10 | காலை 11 மணி இரவு 8 மணி | உத்திரம் தீர்த்தவிழா மயிலாடும்பாறைக்கு சுவாமி எழுந்தருளல் |

எல்லாத் திருநாள்களிலும் நாள்தோறும் நாதசுர இன்னிசையும், வேதபாராயணமும் திருமுறைப் பாராயணமும் நடைபெறும்.

குன்றக்குடி வருக! குமரன் அருள் பெறுக!!

# அறிவியல் உறவும் - ஆன்மீக உறவும்

(டாக்டர். கே. பாலகிருஷ்ணன்)

## கடல்வளம் சார்ந்த தொழில்கள்

இராமநாதபுரம் பிரிக்கப்படாத மாவட்டமாக இருந்ததால் திட்டக்குழு சில பணிகளை அந்த மாவட்டத்திலும் தொடங்கியது. குன்றக்குடி மருதுபாண்டியர் கதர் கிராமத் தொழில் கூட்டுறவுச் சங்கம், பேக்கரி பொருட்கள் முக்கியமாக ரொட்டி தயாரிப்பதற்கு ஒரு கிளையை இராமநாதபுரத்தில் அமைத்து அப்பகுதியிலுள்ள மருத்துவமனைகளுக்கு ரொட்டி விற்று வந்தது.

இராமநாதபுரம் பகுதியில் தொழில்கள் அதிகம் இல்லை. வறட்சிக்குட்பட்டதாகவும், மக்களுக்கு வேலை வாய்ப்பு இல்லாமலும் இருந்தமையால் அடிகளார் அவர்கள் அங்கே தொழில்கள் துவங்கக் கூடிய சாத்தியக் கூறுகளை ஆராயச் சொன்னார்கள். கடலோரப் பகுதிகளில் கடல் வளத்தைப் பயன்படுத்தி சிறுதொழில்கள் துவங்கலாம் என்று தீர்மானிக்கப்பட்டு இதற்கான ஒரு கருத்தரங்கு ஏற்பாடு செய்யப்பட்டது.

கடல்நீரில் சோடியம் குளோரைட் (சாப்பிடும் உப்பு) மெக்னீசியம் குளோரைட், கால்சியம் சல்பேட், பொட்டாசியம் குளோரைட் போன்ற அதிக அளவில் இருக்கக்கூடிய முக்கிய வேதியியல் பொருட்களுடன் சிறிய அளவில் இன்னும் பல வேதியல் பொருட்களும் அடங்கியுள்ளன. கடல் பாசியிலிருந்து "அகர்-அகர்" என்ற பொருள் தயாரிக்கப்படுகிறது. இது மருந்துகள், ஐஸ்கிரீம் தயாரிப்பதிலும், ஜவுளித் துறையிலும் பயன்படுத்தப்படும் ஒரு முக்கியமான பொருள்.

இராமநாதபுரத்தில் உப்பளங்கள் உள்ளன. கடல்நீரில் உப்பு 3 விழுக்காடு அளவு இருக்கிறது. இருந்தபோதிலும் அங்குள்ள நிலத்தடி நீரில் அது முப்பது விழுக்காட்டிற்கும் மேல் இருப்பதால், நாம் சாப்பிடும் உப்பு தயாரிப்பதற்கு அந்த நிலத்தடி நீர் தான் பயன்படுத்தப்படுகிறது.

உப்பு நீரை வயல்கள் போன்ற அமைப்பில் நிரப்பி வைத்து, நீர் ஆவியாகும் போது அதிலுள்ள உப்புக்கள் மட்டும் அடியில் தங்கிவிடுகின்றன. முதலில் கால்சியம் சல்பேட் அல்லது ஜிப்ஸம் என்ற வேதியல் பொருள் நீரிலிருந்து பிரிந்து படிவமாகிறது. ஜிப்ஸம் பல

வகைகளில் பயன்படுகிறது. ப்ளாஸ்டர் அப் பேரிஸ், சாக்பீஸ் தயாரிப்பது, கடலைக்கு உரமாக பயன்படுத்துவது, அமிலம் அதிகமுள்ள நிலத்தைப் பதப்படுத்துவது போன்ற பயன்பாடுகள் உள்ளன. இதன் விலையும் குறைவு.

இதற்கு அடுத்தபடியாகத்தான் சாப்பாட்டு உப்பு (சோடியம் குளோரைட்) கடல் நீரிலிருந்து பிரிந்து தரையில் படிகிறது.

சோடியம் குளோரைடுடன் பொட்டாசியம் அயோடைட் சேர்த்து அயோடின் உப்பு தயாரிக்கப்படுகிறது. இதற்கு வேண்டிய பொட்டாசியம் அயோனைட் தயாரிக்கும் தொழில்நுட்பம் செக்ரியில் உள்ளது.

எஞ்சியுள்ள நீரை வேறு வயலில் பாய்ச்சி அதிலிருந்து மெக்னீசியம் குளோரைட் (Sea Bitted) பிரிக்கப்படுகிறது. கிடைக்கக்கூடிய மெக்னீசியம் குளோரைடிலிருந்து மெக்னீசியம் உலோகம் தயாரிக்கும் தொழிலகத்தை செக்ரி விஞ்ஞானிகள் வாலிநோக்கத்தில் அமைக்க உதவினார்கள். மெக்னீசியம் குளோரைடிலிருந்து மெக்னீசியம் ஹைட்ராக்ஸைடு போன்ற இன்னும் பல வேதியல் பொருட்கள் தயாரிக்கலாம்.

ஆக கடல் நீரிலிருந்து பலவிதமான வேதியல் பொருட்கள் உற்பத்தி செய்ய முடியும் என்றும் அதற்கான தொழில் நுட்பங்கள் நமது ஆய்வுக்கூடங்களில் உள்ளது என்றும் அறியப்பட்டது.

"மைய உப்பு மற்றும் கடல் வள வேதியல் ஆராய்ச்சி நிறுவனம்" குஜராத் மாநிலத்தில் பவநகர் என்னும் ஊரில் செயல்பட்டு வருகிறது. இந்த ஆய்வகம், குன்றக்குடி கிராமத் திட்டக்குழு, மைய மின் வேதியல் ஆய்வகம் மற்றும் மாநில உப்பு உற்பத்தித் துறை ஆகியவைகளை இணைந்து வாலிநோக்கம் உப்பளத்தில் அடிகளார் அவர்கள் தலைமையில் ஒரு கருத்தரங்கு நடத்தியது. மாநில தொழில் துறை அமைச்சர் திரு. இராசாராம் கருத்தரங்கை துவக்கி வைத்தார். இக்கருத்தரங்கில் கடல்நீரில் கரைந்திருக்கும் வேதியல் பொருட்கள் தயாரிக்கும் தொழில் நுட்பங்கள் விளக்கப்பட்டன. கடலோரத்தில் கடல் நீரில் வளரும் கடல் பாசிகளிலிருந்து தயாரிக்கக்கூடிய பொருட்களைப் பற்றியும் எடுத்துரைக்கப்பட்டன.

கருத்தரங்கின் முடிவில் கால்சியம் சல்பேட், மெக்னீசியம் குளோரைட், மெக்னீசியம் ஹைட்ராக்ஸைடு, அயோடின் உப்பு, கடல் பாசி வளர்ப்பு மற்றும் அகர்-அகர் தயாரித்தல் ஆகிய தொழில்கள்

ஆரம்பிப்பது என்று முடிவு எடுக்கப்பட்டு பவநகருக்கு ஒரு குழு அனுப்பி மேலும் தொழில் நுட்ப விவரங்கள் சேகரிப்பது என்று முடிவு எடுக்கப்பட்டது.

தவத்திரு அடிகளார் அவர்களும், நானும் பவநகர் செல்ல ஏற்பாடுகள் செய்த காலத்தில் பேராசிரியர் முனைவர் K. நடராசன் (சென்னை பல்கலைக் கழகத்தில் பணியாற்றியவர்) அந்த ஆய்வகத்தின் இயக்குநராக இருந்தார்கள். இவர் சேலம் பகுதியைச் சேர்ந்தவர். கிராமப்புற முன்னேற்றங்களில் மிக ஆர்வம் கொண்டவர். செக்ரியினுடனும் அலுவலகத் தொடர்பு கொண்டவர். எல்லாவற்றிற்கும் மேலாக அடிகளார் அவர்களிடம் மிக்க அன்பும், மரியாதையும் கொண்டவர்.

மைய உப்பு மற்றும் கடல்வள வேதியல் பொருட்கள் ஆய்வகத்தின் சிறப்பையும் நாங்கள் அங்கு சென்றபோது எடுக்கப்பட்ட முடிவுகளையும் அடுத்த பாகத்தில் காணலாம்.



---

# மக்கள் சிந்தனை

## உரிமை, பதிப்பு, அறிக்கை

| | | | |
|---|---|---|---|
| 1. | இதழின் பெயர் | : | மக்கள் சிந்தனை |
| 2. | மொழி | : | தமிழ் |
| 3. | வெளியீடு | : | திங்கள் இதழ் |
| 4. | வெளியீடு இடம் | : | குன்றக்குடி – 630 206 |
| 5. | ஆசிரியர் / உரிமை | : | மரு. பரமகுரு<br>திருவண்ணாமலை ஆதீனம், குன்றக்குடி |
| 7. | பதிப்பாளர் / அச்சகம் | | பழ. பாண்டித்துரை<br>சண்முகநாதன் அச்சகம்,<br>மேலரத வீதி, குன்றக்குடி. |
| 8. | பதிவு | : | செய்தி இதழ் |

*மேற்கண்ட விவரம் யாவும் உண்மை என்றும், நம்பத் தகுந்தவை என்றும் உறுதி கூறுகிறேன்.*

நாள் : 16-3-2006

**மரு. பரமகுரு**

# "அருளாலய எதிர்குரல்"

(தமிழாகரர். **தெ. முருகசாமி,** புதுச்சேரி -9)

காய்த்தமரம் கல்லடிதான் படுமென் கின்ற
கன்னித்தமிழ் நாட்டோரின் கருத்திற் கேற்பச்
[1] சேய்த்தமிழின் நூல்களைத்தான் செய்தோ ரெல்லாம்
செத்துவிட்ட காரணத்தால் கேட்பா ரற்று
வாய்த்தபடி வள்ளுவத்தை ஆளுக் காளாய்
வகைவகையாய்ப் பிய்த்தேதான் பதிப்பித் திங்கே
தாய்த்தமிழின் போக்கினையே தலைகீ ழாக்கும்
[2] தறுகண்மை வளர்வதைத்தான் தடுப்பா ருண்டோ!

புதிதாக வந்ததிரு வள்ளு வந்தான்
பொருளார்ந்த அடிப்படையில் வந்ததாகப்
பதிப்பித்த அறவாணர் கூறு கின்றார்!
பழையகுறள் பொருளற்றா போச்சு? மேலும்
மதிப்பான காமத்தை மாற்றா வாறு
மதிப்புடனே அறம்பொருளை மட்டும் மாற்றிக்
கொதிப்படைய செய்ததெலாம் அவர்தாம் கொண்ட
கொள்கையினை வற்புறுத்த லாகு மன்றோ!

தமிழருக்குக் கடவுள்போல் வான்சி றப்புத்
தரத்தாலே ஒன்றென்ற கார ணத்தால்
அமிழ்தாக வைத்திட்ட நால்மு கப்பை
அதிரடியாய் மாற்றியதோ டன்றி நாட்டோர்
உமிழ்கின்ற கயமைக்கோர் இயலைச் சொல்லல்
உலகியலுக் கேற்றதெனில் இன்பப் பாலில்
தமிழ்க்களவு கற்பியல்கள் மட்டும் ஏனோ
தகுகாதல், திருமணமாம் இயலா காதோ?

---

1. சேய்த்தமிழ் - பழந்தமிழ் 2. தறுகண்மை - அஞ்சாமை

ஏனிவற்றை இவ்வாறு மாற்ற வில்லை?
இன்பத்தைத் திட்டமிட்டே செய்த ஆசான்
ஏனையபால் இரண்டைமட்டும் ஏனோ தானோ
என்றேதான் செவ்வாரா? திட்ட மிட்டே
தானந்தப் பாலிரண்டைச் செய்யா ராகித்
தனித்திட்ட கட்டழகும் இல்லை என்று
தானறிந்த வாறாக எழுதல் நன்றோ!
தகுதியதோ அறவாணர் ஆய்வுக் கேதான்!

வள்ளுவத்தைச் சமயச்சார் புடைய நூல்கள்
வரவேற்க வில்லையென்ற குற்றத் தோடு
தெள்ளுதமிழ் ஆண்டாளின் பாட்டில் காணும்
தெளிவான "தீக்குறளை" என்ற தற்கு
விள்ளுகின்ற புறம்பேசல் எனும்பொ ருள்தான்
விதிப்படியாய் இல்லையெனக் கூறித் தீமை
கொள்ளுகின்ற திருக்குறள்நூல் என்றே ஆண்டாள்
கொண்டதென அறவாணர் கூறல் நன்றோ?

புறங்கூறல் என்பதனை ஓதல் என்று
புறஉலகில் கூறாத கார ணத்தால்
திறமான தீக்குறளை ஓதல் என்றால்
திருக்குறளைக் கற்கத்தான் மாட்டோம் என்பதே
அறமான பொருளென்று, அறமில் லாமல்
அறவாணர் கூறுவதால் தமிழுக் கான
[1] மறமான காலமிதோ? என்ப தாக
மதிமயங்கும் போக்காகப் போச்சே அந்தோ!

இவ்வாறாய் ஏங்குகையில் இந்த நாட்டில்
இருக்கின்ற குறள்பீட அமைப்பைச் சார்ந்தோர்
ஒவ்வாத வகையாகக் குறளைத் தானும்
ஒவ்வொருவர் செய்கின்ற செயலைப் பார்த்துச்
செவ்வியலாய் வெளியிடவே செய்தால் நம்மின்
செழுந்தமிழும் பிழைக்குமெனக் குன்றக் குடியின்
செவ்வொலியாய் ஒலித்திட்ட அருளா லயத்தின்
செழுங்குரலை எதிர்க்குரலாய்க் கேட்டேன் நானே!

---

மறமான - தீமையான

உ
சிவமயம்




# தெய்வப்பழநியில் புகழ்பெற்றது
# பழநி

## பரிமள விலாஸ்

# S. சித்தநாதன்

## ஜவ்வாது வாசனை விபூதி
## &
## ஸ்பெஷல் பஞ்சாமிர்தம்

வாங்கி உபயோகியுங்கள்

**Prop : S. சித்தநாதன் சன்ஸ்**
**அடிவாரம், பழநி — 624 601.**

போன் கடை : 242405 வீடு & ஸ்டோர் : 242406



# மக்கள் கல்வி நிலையம்

(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், இந்திய அரசு)

**குன்றக்குடி - 630 206**

✆ : 04577 - 264567 Mobile : 94433 64200

குன்றக்குடி மக்கள் கல்வி நிலையம், கிராமம் மற்றும் நகர்ப்புற மக்களுக்கு கீழ்க்கண்ட தொழில்நுட்ப பயிற்சிகள் வழங்கிவருகிறது. பயிற்சி நிறைவு பெற்றபின் சான்றிதழ்களும், தொழில் துவங்க ஆலோசனைகளும் வழங்கப்படும். சுய உதவிக் குழுக்கள், கிராமப்புற மக்கள், இளைஞர்கள், பெண்கள் அனைவரும் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

இயக்குநர்,

மக்கள் கல்வி நிலையம், குன்றக்குடி.

## பயிற்சிகள் (TRADES)

1. தையல் பயிற்சி 2.கணிப்பொறி பயிற்சி 3. எலக்ட்ரிக்கல் வயரிங் மற்றும் ரிப்பேரிங் 4. மின் அணுக்கருவிகள் பழுதுபார்த்தல் 5.வெல்டிங் பயிற்சி (பற்றவைத்தல்) 6.சீட் மெட்டல் உற்பத்தி 7.பைபர்கிளாஸ் பொருள்கள் உற்பத்தி 8.கட்டிட தொழில்நுட்பம், பொருள்கள் உற்பத்தி 9.இரண்டு நான்கு சக்கர வாகன பராமரிப்பு மற்றும் ரிப்பேரிங் 10.கயிறு மற்றும் பாய் தயாரித்தல் 11. குளிர்சாதனப் பெட்டிகள் ரிப்பேரிங் 12.வார்ப்பு உலோக உற்பத்தி 13.ஹாலோ பிளாக் & இமாசைக் கற்கள் தயாரித்தல் 14. சாக்பீஸ், மெழுகுவர்த்தி தயாரித்தல் 15. கம்ப்யூட்டர்சாம்பிராணி, பினாயில் தயாரித்தல் 16. மருத்துவ உதவியாளர் 17.மருத்துவ உபகரணங்கள் பழுதுபார்த்தல் மற்றும் கையாளுதல் 18. திரை அச்சு வேலைகள் 19. வீட்டு உபகரணப் பொருட்கள் பழுதுபார்த்தல் 20.யோகா ஆசிரியர் பயிற்சி 21. ஓவியம் மற்றும் வரைபடம் வரைதல் 22. கைவினைப்பொருட்கள் தயாரித்தல் 23. உணவுப் பொருட்கள் தயாரித்தல் 24. கேஸ் வெல்டிங் 25. தொழில்முனைவோர் மேம்பாட்டுப்பயிற்சி 26. இயற்கை உயிர் உரம் (மண்புழு) தயாரித்தல் 27. வேளாண் சார்ந்த பயிற்சிகள் 28.தோட்டக்கலை சார்ந்த பயிற்சிகள் 29. கால்நடை சார்ந்த பயிற்சிகள் 30. மின்சாதனப்பொருட்கள் பராமரிப்பு

தகுதி : தன்முனைப்பு, தன் ஆர்வம் மட்டும்.
பயிற்சி நேரம் : பயிற்சி நாள்தோறும் இரண்டு மணி நேரம் மட்டும். ஒன்றுக்கும் மேற்பட்ட பயிற்சிகளில் சேரலாம்.
குறிப்பு : ஒவ்வொரு பயிற்சிக்கும் பயிற்சி நிறைவு பெற்றபின் தேர்வின் அடிப்படையில் சான்றிதழ்கள் வழங்கப்படும்.

## தவத்திரு குன்றக்குடி அடிகளாரின்

# *புதிய நூல்*

உலகம் முழுக்கத் திருக்குறள் பரப்பப் பேரவை கண்டவர்; தம் வாழ்நாள் முழுக்க வள்ளுவ நெறியினை வழங்கி நின்றவர்; வாழ்ந்து நிலைத்தவர் ஆகிய அடிகள் பெருமான் எழுதிய திருக்குறள் உரை முதன் முதலாக, நூல் வடிவமாக!





KOVILOOR ANDAVAR LIBRARY, KOVILOOR
A. No. 45717

**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**
**திருக்குறள் உரை**
(விலை. ரூ. 160/- பக்கங்கள் : 360)

பதிப்பகங்கள், கல்லூரி, பள்ளி, நிறுவனங்கள் மற்றும் இலக்கிய அமைப்புகள் இவற்றோடு மாணவ, மாணவியர்க்கும் "மக்கள் சிந்தனை" சந்தாதாரர்க்கும் விலைச் சலுகை உண்டு.

அடிகளாரின் முத்துவிழா வெளியீடு

**அருள்நெறிப் பதிப்பகம்**
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்.

MAKKAL CHINTHANAI - March 2007 Price Rs. 5-00
Date of Publication 20-03-2007
Register of News Paper for India No. 85913/81 Register No. TN/SR-266/2006-2008

*With Best Compliments from*

# HOTEL KARPAGAM INTERNATIONAL

**(Kundrakudi Adheena Building)**
**41, South Mada Street, Mylapore, Chennai - 600 004.**
**Phone : 24959987, 24959988 Grams : Best Hotel**

Location : In the heart of Mylapore, nearer to
Sri Kapaleeswarar Temple,
30 minutes drive from Air Port,
20 minutes from Railway Station.

## FACILITIES

- Well furnished rooms - A/c and Non A/c.
- Spacious Car Parking.
- Courteous Room Service.
- 24 Hours STD / ISD Facilities.
- Express Laundry Service.
- KARPAGAM - A/c Restaurant Serving S. Indian, N. Indian, Tandoor and Chinese Food.
- KARPAGAM, Fast Food & Ice Cream Parlour.
- Karpagam Non A/c Restaurant Serving S. India Meals,
- Tours and Travel Services.
- Marriage & Banquet Hall Facilities for 250 persons.







பெறுநர்

திரு ஆதீனகர்த்தர் அவர்கள் அவர்கள்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர்
காரைக்குடி (வழி)

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166